உ
சிவமயம்.

# "துறவி"

1956

| | | |
|---|---|---|
| துன்முகி<br>மலர் 2 | திங்கள் வெளியீடு. | வைகாசி<br>இதழ் 5 |




## தமிழ் நாட்டுத் துறவிகள் சங்கம்,
திருவண்ணாமலை.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றினை
பற்றுக பற்று விடற்கு"

பதிப்பாளர்:
சுவாமி சொரூபானந்தா

ஆண்டுக் கட்டணம் ரூ 2/- தனி இதழ் அணா 3/-

ஓம்.

# " துறவி "

## பொருளடக்கம்.


| எண். | | | பக்கம். |
|---|---|---|---|
| 1 | கடவுள் வாழ்த்து | — — | 99 |
| 2 | இன்பவாழ்வு | — — | 99 |
| 3 | கிழவரும், குமரரும் | — மன்றிறையடிகள் | 101 |
| 4 | அவிரோதவுந்தியார் | — சுவாமி முக்தானந்தா அவர்கள் | 105 |
| 5 | பிறவியைப் பழித்தல் | — சுவாமி அருணகிரிநாதரவர்கள் | 110 |
| 6 | நாடு | — ஐயாறு அடிகள் | 113 |
| 7 | யோகசிகோபநிஷத் (தமிழ் மொழிப்புரை) | — திரிமூர்த்தி சுவாமிகள் | 119 |


இதழின் அட்டை முகப்பில்:

அப்பற்றினை — பிழை
அப்பற்றைப் — திருத்தம்

ஓம்.

# "துறவி"


| துன்முகி மலர் 2 | தமிழ் திங்கள் வெளியீடு. | வைகாசி இதழ் 5 |
|---|---|---|


### கடவுள் வாழ்த்து.

உள்ள முள்கி யுகந்து சிவனென்று
மெள்ள வுள்க வினைகெடு மெய்ம்மையே
புள்ளி னார்பணி புள்ளிருக்கு வேளூர்
வள்ளல் பாதம் வணங்கித் தொழுமினே.

—அப்பர்.

கன்றழைக்கு முன்னே கருதிவரும் ஆப்போல
நின்றழைக்கு நாயேற்கு நேர்தோன்றி—ஒன்றினுக்கும்
அஞ்சாதே வாவென் றழைப்பாய்தென் போரூரா
எஞ்சாத பேரருளா லின்று.

—சிதம்பர சுவாமிகள்,

## இன்பவாழ்வு.

நாம் ஒவ்வொருவரும் விரும்புவது துன்பமின்றிய இன்பவாழ்வு எப்பொருளை அணுக அணுக அறியாமை நீங்கி ஆனந்த அடைவு உளதாகின்றதோ, எப்பொருளை விட்டு அகல அகல அறியாமையும் ஆனந்த மின்மையும் உளதாகின்றதோ அப்பொருளே மெய்ப்பொருள் இத்தகைய உண்மைப் பொருளை உள்ளவாறு உணர்தலே மக்களாகிய நமது இன்றியமையாத கடமையாம். இதன்றி வேறு எந்த இன்ப வாழ்வும் வாழ்வாகாது. இவ்வாழ்விற்கு நாம் பல துறையிலும் பாடு படுகின்றோம். சிலர் பொருள் நிரைய இருந்தால் இன்ப வாழ்வு வாழலாம் என எண்ணுகின்றனர். மற்றும் சிலர் வீடு, மனை, மாடு, நிலம் முதலியன இருப்பின் இன்பவாழ்வினை எய்தல் கூடும் என்கின்-றனர். பலர் கல்வி, பட்டப் படிப்பு, பதவி முதலியன இருப்பின்

அமையும் எனக் கருதுகின்றனர். வேறு சிலர் தலயாத்திரை விரதம் முதலியவைகளைக் கைக்கொள்ளின் இன்பஅடைவு எய்தல் கூடுமென நம்புகின்றனர். இவ்வாறு, துன்பம் இன்றிய இன்பம் வேண்டி பொருளைக் கொண்டு புறத்தே அலைந்து வாழ்நாளை வீணாக்கி இன்பம் கிடைக்கவில்லையே என்று ஏங்குகின்றனர். எத்தனைச் செல்வங்கள் மாடமாளிகை கூட கோபுரங்கள் ஏவலாள் முதலிய இருப்பினும் இன்பம் துய்க்க இயலாது.

இதன்றி துறவுக்கோலம் பூண்டு மலைக்குகையிலும் காடுகளிலும் தனித்திருந்து தவ்மியற்றின் இன்பவீடு கிட்டிவிடும் என்றும் அஃதின்றிய ஏனையோர்க்கு இயலாதென்று நினைப்பதும் தவறு. வேடமும் தனியிடமும் பிறவும் அவசியமே. ஆயினும் அதோடமைந்து விடுதல் நன்மை பயவாது.

ஞானிகள், யோகிகள், சித்தர்கள் எல்லாம் புறப்பொருள் ஒன்றும் இன்றியவர்களாய் எப்போதும் இன்பவாழ்வில் திளைத்திருந்தனர் என்றால், நாம் மாத்திரம் ஏன் அவ்வாறு இருக்க இயலாது இயலும்,

முதலில் துன்பம் இன்றிய இன்பம் எது என்பதை ஆய்தல் வேண்டும். இதற்கு உண்மைத் தவத்தவர்களின் கூட்டுறவு வேண்டும் முதலிலேயே நமது அறியாமையாகிய இருளுக்கு அறிவாகிய ஒளியைத் தரும் ஆற்றல் உடையவர்களா என நன்குதெரிந்து அணுகல்வேண்டும் பின் குறைகாணின் தூற்றுது விலகிவிடுதல் நலம். குளிரைப் போக்கிக் கொள்ள விரும்பியவன் அணுகாமலும் அகலாமலும் தீய்க்காய்வது போல ஆசிரியனிடத்து ஒழுக வேண்டும். மிக அணுகின் சுடுதலும் மிக விலகின் குளிர் நீங்காமையும் உளவாம். எனவே உண்மை உணர்ந்த ஆசிரியனிடத்து அணுகி அப்பெருமானின் திருவுளக்குறிப்பின் வழி நின்று ஒழுகி, அன்பும் அருளும், நிறைந்த அவ்வாசிரியர் உபதேசிக்கும் அருள் வாக்கியங்களைக் கேட்டு, சிந்தித்து, தெளிந்து நிட்டை கூடி, என்றும் நிலைபேருயுள்ள இன்ப வீட்டினை யுணர்ந்து பேரானந்தப் பெருவாழ்வில் திளைத்தலே மக்களாகிய நாம் அடையும் பேரும்- இதுவே துன்பமின்றிய இன்பவாழ்வாம்.

என்றும் இளமையும்எழிலும் உடைய இயற்கை வடிவினனுகிய எம்மிறை திருவருள்வெல்க.

# கிழவரும் குமரரும்.

(மன்றிறையடிகள்.)

[உயர்ந்த உள்ளம் படைத்திருக்க வேண்டும். உள்ளப் பண்பாடின்றி ஆயுளினுலே, கல்வியினுலே, திருவினுலே உருவினுலே மற்றவகைகளினுலே உயர்ந்திருப்பின் பயனில்லை. பொறிகளைத் தன் வயப்படுத்தும் ஆற்றல் படைத்திருக்க வேண்டும். மதயானையையும் வெல்லும் வன்மை பெற்றிருக்கலாம் ''உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான் ... .... ... .... என்னும் அமுதவாக்கிற்கிணைய ஐம்பொறிகளாகிய யானைகளை வெல்லும் வன்மை யின்றேல் பயனில்லை என்னும் கருத்துக்களை விளக்குவது இக்கட்டுரையாகும்]

கிழவர் மிகவும் வயது நிரம்பியவர். அவர்வயது ஐம்பது முடிந்தது. நடப்பது ஐம்பத்தொன்று' ஐம்பது முடிந்தது என்றால் 1905-ம் ஆண்டில் பிறந்தவர் அல்ல, அநேக கோடி வருஷங்களுக்கு முன்னே பிறந்தவர். அப்படியிருக்க ஏன் ஐம்பத்தொரு வயதுடையவர் என்று சொல்லவேண்டும் என்னும் ஐயம் தோன்றலாம்: அதையும் விளக்கிவிட்டு மேலே செல்லுகிறோம்.

கிரேதாயுகம், திரேதாயுகம், துயுவாபரயுகம், கலியுகம் என்னும் நான்கும் சேர்ந்து ஒரு சதுர்கம் என்று பெயர்பெறும். ஒருசதுர்யுகத்துக்கு நாற்பத்து மூன்றுலக்ஷத்து இருபதாயிரம் வருடமாம். நாற்பத்து மூன்றுலக்ஷத்து இருபதாயிரம் வருடங்கொண்ட சதுர்யுகம் சென்றால் பிரமாவுக்கு ஒரு இரவு. ஆகவே இரண்டாயிரம் சதுர்யுகம் சென்றால் பிரமாவுக்கு ஒருநாள். இந்த நாள் முப்பது கொண்டது ஒருமாதமும் இந்தமாதம் பன்னிரண்டு கொண்டது ஒவருடமுமாம். இந்தவருடம் நூறுமுடிந்தால்பிரமாவுக்கு ஆயுசுமுடியும். இந்த நூறு ஆண்டிலே முதல் ஐம்பது ஆண்டு முதற்பாரார்த்தமும், மற்ற ஐமபது ஆண்டு இரண்டாம் பரார்த்தமுமாம். பிரமாவுக்கு பகல் முடிவு ஏற்படும் பொழுது தினப்பிரளயம் உண்டாகும். அப்போது பிரமா ஆயிரம் சதுர்யுகம்கொண்ட இரவிலே யோகநித்திரை செய்வார். அந்த இரவின் முடிவிலே உண்டாம் பகற்பொழுதிலே படைத்தற் றொழில் செய்வார்.

தற்பொழுதுள்ள பிரமாவுக்கு முதற்பரார்த்தமாகிய ஐம்பது வயசுஞ் சென்றன. நடந்துவருவது இரண்டாம் பரார்த்தத்தில் முதல் வருஷத்து முதல் மாசத்திலே முதல்தினம். இதனுலேதான் அநேக கோடி வருஷங்களுக்கு முன்னேபிறந்தவர் என்று முன்னர்க் குறிப்பிட்டோம்.

இவ்வளவு வயது படைத்து விளங்கும் பிரமதேவர் அநுபவத்திலும் அறிவிலும் சேர்மை பெற்றிருக்கலாம் இவர் உள்ளம் பண்பாடடைந்து சீரிய நிலையுடையதாயிருக்க வேண்டும். அவ்வாறு இருக்கிறதா? எனின் இல்லை. வயது நிரம்பிய இவருக்குக் காம வுணர்வின் வீறு குன்றியதா வெனின் அதுவும் இல்லை.

பிரமதேவர், உலகத்திலேயே மிக்க அழகு படைத்த பெண்ணைப் படைப்பதற்காக எண்ணி மற்றப் பெண்களில் யார் யாருக்கு எவ்வெவ் வங்கங்கள் மிக்க அழகுடையனவா யிலகுகின்றனவோ அவைகளில் திலம் திலமளவாக (எள்) எடுத்துச் சேகரித்து அவ்வழகெல்லாம் திரண்டு உருவாகிய ஒரு பெண்ணைப் படைத்தார். உத்தமமான அங்கங்களில் ஒவ்வொரு திலமளவு எடுத்து உருவாக்கிய அதனால் அவளுக்குத் திலோத்தமை என்று பெயர். அழகினுக்காகவே தோற்றுவித்த அப்பெண்ணின் அழகைப்பற்றி விவரித்துக் கூறவும் வேண்டுமோ? தன்னைத் தோற்றுவித்த பிரமதேவரே தன் மகள் முறையிலமையும் பெண் என்று நினையாமல் மயங்கி அவள் மீது மோகங் கொண்டனர் எனின் அவளழகினைப்பற்றிச் சொல்லாமலே தெரியலாம். திலோத்தமை என்னும் அப்பெயரும் நன்கு அதனைத் துலக்குகின்றது.

தன்னுடைய படைப்பிலே எத்தனை கோடிப் பெண்களையோ படைத்திருப்பார். அவ்வளவு பெண்களின் அழகுகளையும் பார்த்தமையாலாவது அமைதியுறலாம். அல்லது தனக்கு மகள் முறையிலமையுமதனுலாவது மனதினை ஒருவகையாகத் திருப்பிவிடலாம். தன்னுடைய முதுமை காரணமாகவாவது ஆசை வெள்ளத் தகப்படாது ஒதுங்கிக் கொள்ளலாம். இவையனைத்தையும் கடந்து அத்திலோத்தமையினது அழகில் மயங்கி அவள்மீது இச்சைவைத்து அவள் அழகு வெள்ளத்தைத் தனது நான்கு முகங்களினாலும் பருகினர் மேலும் பலவகைச் செயல்களும் புரிந்து அழுங்கினர் என்று சொல்லப்படுகிறது இதற்கெல்லாம் காரணம் உள்ளம் உயர்ந்த நிலைமையிலில்லாமை யொன்றேயாம்.

கிழவர் செயல் இங்ஙனமாக உயர்ந்த உள்ளம் படைத்த திருவினராகிய குமாருடைய அருஞ்செயலையும் சற்று ஆராய்வாம். குமரர் என்று இங்கே குறிப்பிடுவது நம் தண்டமிழ் நாட்டிலே சீகாழிப்பதியிலவதரித் தருளிய திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகளையாம். திருமயிலையில் என்பைப் பெண்ணுக்கினர் என்பது அனைவரும் அறிந்தவிடயம். அவருக்கு அப்போது வயது பதினாறு. சிவநேசச் செட்டியார் அப்பெண்மணியைத் திருஞானசம்பந்தப்பெருமானுக்குத் திருமணம் செய்து கொடுக்க வேண்டுமென்றே எண்ணி அவரது வருகை எதிர்நோக்கியிருக்கையில் எதிர்பாராதவண்ணம் அப்பெண் விடந்திண்டி இறத்தலும் அவருக்கே அப்பெண்ணைக்

கொடுப்பதென முடிவு செய்திருந்தபடி அவரிடமே ஒப்படைத்து விடுவதென எண்ணிக் குடத்தில் என்பையும் சாம்பரையும் அடைத்துப் பாதுகாத்து வைத்திருந்தனர். சுவாமிகள் திருமயிலாப்பூர் வருங்காலத்துச் சிவநேசச் செட்டியாருடைய செயல் முற்றவும் அடியவர்கள் கூறத்தெரிந்து அவருடைய கருத்தை முற்று வித்தற் பொருட்டுக் கபாலீச்சுரம் என்னும் ஆலயத்திற் பிரவேசித்து சிவபெருமானை வலஞ்செய்து வணங்கித் தோத்திரம் செய்துகொண்டு திருக்கோவிலுக்குப் புறத்திலே வந்து சிவநேசரை நோக்கி "உம்முடைய மகளினது எலும்மை நிறைத்த குடத்தைத் திருக்கோயிற் புறமதிற்றிரு வாயிலிலே கொண்டு வாரும்" என்று அருளிச் செய்தார். செட்டியாரும் மகிழ்ச்சியோடு அவ்வாறே கொண்டு வருதலும் அடியவர் திருக்கூட்டத்துடன் திருக்கோபுர வாயிலின் நேரே வந்து பூம்பாவையினது எலும்பிருக்கின்ற குடத்தைக் கண்டு திருவருள் நோக்கஞ் செய்து "மட்டிட்ட புன்னையங்கானல் மடமயிலை ..." என்னுந்திருப் பதிகமோதிய வளவில் குடத்தினுள் வளர்ச்சியுற்றிருந்து குடமுடைதலும் திலோத்தமையினும் மிக்க எழில்படைத்த அப்பூம்பாவை வெளிப்போந்து இறைவனையும் சுவாமிகளையும் வணங்கினள்.

எண்ணில்லாத வயசையுடைய பிரமதேவர் தம்மாலே படைக்கப்பட்ட திலோத்தமையினிடத்திலே அவளினது அழகின் வெள்ளத்தை நான்கு முகங்களினாலே கண்டார். பதினாறு வயசுடைய திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரோ அத்திலோத்தமையினும் பார்க்க அநேக மடங்கு அழகு பெற்று தம்மால் படைக்கப் பெற்று விளங்கும் பூம்பாவையினிடத்திலே, பரமசிவனது பெருங்கருணை வெள்ளத்தை ஆயிரம் முகங்களினாலே கண்டார்.

பூம்பாவையைக் கண்ட தந்தையாராகிய சிவநேசர் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளை வணங்கி அடியேன் அருமையாகப் பெற்ற இப்புத்திரியைத் திருமணஞ் செய்து கொள்ளவேண்டுமென்று வேண்டிக் கொண்டார். அக்காலத்திலுங்கூட நீர்பெற்ற பெண் விடத்தினால் இறந்தாள். திருவருள் மகிமை விளங்கும் பொருட்டு எம்மால் உற்பவிக்கப் பெற்றமையால் இவ்வார்த்தை தகாது என்று மறுத்துரைத்தனர்.

திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் பிரமாவைப் போல வயது நிரம்பியவரல்லர் நல்ல இளம்பருவத்தராய் இருந்தனர். பிரமதேவரைப் போன்று சுகபோகங்களை அநுபவித் தவருமல்லர் அதனாலே அமைதி பெற்றனர் என்று சொல்ல. இன்னும் அப்பெண் திலோத்தமையினும் மிக்க எழில்படைத்தவளாகவே இருந்தாள். இஃதன்றியும் தனக்குத் திருமணஞ் செய்து கொடுப்பதற்காகவே வளர்க்கப் பெற்றவள். தான் அவ்வாறு திருமணஞ் செய்து கொள்ளும் நினைவை முன்னதாக எண்ணிவிட்டாலும் சிவநேசர் திருமணம் செய்துகொள்ள வேண்டும்

என்று பலவாறாக வேண்டிக்கொள்கின்ற அக்காலத்திலாவது மனம் மாறுதல் பெறலாம். மாறுதல் பெறாது நேர்மை ஒன்றையே எண்ணி அதனை அவருக்கு எடுத்துரைக்கின்றார் என்றால் அவர்தம் உள்ளப் பண்பாட்டின் உயர்வை இங்குதான் உணரவேண்டும். 'உரன் என்னுந் தோட்டியால்....''ஐம்பொறிகளாகிய களிறடக்கும் வன்மை பெற்றிருத் தலையும் உணர வேண்டும். உலகத்திலே உள்ள பெண்களை யெல்லாம் தமக்கை, தங்கை முறையில் நோக்க வேண்டும் என்பது உண்மை நூலுணர்ந்தார் கொண்ட முடிபு. நாம் அவ்வாறாக எண்ணுவதனால் நமக்கு உடன் பிறந்த தமக்கை தங்கையர் போல் உதவி செய்வார் களா என்றால் இல்லை. ஆனால் தவறான வகைகளில் நினைக்கினும் அவ்வாறாக உதவப் போவதுமி இல்லை ஆனால் நேர்மையாக உடன் தோன்றியவர்களாக எண்ணுவதால் புண்ணியமும், வேறு வகையால் பாவமும் மட்டும் மிஞ்சுகிறது. இவை எண்ணம் மாத்திரமாக உண் டாகும நன்மை தீமைகளாம். இவ்வாறாக எல்லா நன்மை தீமை களிலும் மனம் நேர்மையான முறையிலேயே செல்லும் பழக்கத்தினை மேற்கொள்ளுதல் வேண்டும்.

அவ்வாறாய உள்ளப் பண்பாடு பிரமதேவரிடத்தில் இல்லாமை யினால்தான் அவர் இத்தகைய தவறாய வழியிலீடுபட நேர்ந்தது. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் மிக்க இளைஞராயிருந்துங்கூட அத்தகைய மேன்மையான உள்ளப்பண்பாட்டினால்தான் நேர்மை யான முறையிற் செல்லவும் சிவநேசச் செட்டியாருக்கும் உணர்த்தவும் வாய்ப்பு உண்டாயிற்று.

மேலே காட்டிய இக்கருத்துக்கள் அனைத்தும் சேக்கிழார் சுவாமிகளுடையதாகும். வைகாசிப் பூசத்திருநாள் சேக்கிழார் சுவாமிகளின் திரு நக்ஷத்திரம அந்நன்னாளை யொட்டிவரும் இவ்விதழில் அவர்கள் கருத்திலொன்றை வெளியிடுவது பொருத்த மானதாகும் என்றே இஃதெழுதப்பெற்றது. இக்கருத்துக்களடங்கிய சேக்கிழார் சுவாமிகள் அருளியத்திருப்பாடல் அடியிற் குறிக்கப் பட்டிருக்கிறது.

"எண்ணிலாண் டெய்தும் வேதாப் படைத்தவ
ளெழிலின் வெள்ளம்
நண்ணுநான் முகத்தாற் கண்டான் அவளினும்
நல்லாள தன்பால்
புண்ணியப் பதினாருண்டு பேர்பெறும்
புகலி வேந்தர்
கண்ணுதல் கருணை வெள்ளம்
ஆயிர முகத்தாற்கண்டார்"

(திருஞா. புராணம். கவி. ௧௧0௧)

# அவிரோத வுந்தியார்.

தவத்திரு சுவாமி முக்தானந்தா அவர்கள்,
(சங்கமூர்த்தி, ஆனந்தாஸ்ரமம், வியாசர்பாடி, சென்னை.)

முன் (ம 2 இ 4 ப 92) தொடர்ச்சி

எல்லோரு மேதுறத்த லேலா தெனின் நல்லோர்
நில்லாமை கண்டுமனம் நீப்ப ரெனப் பகரல்.

காலன் என்ற சொல்லைக் காதிற் கேட்ட போதே மக்கள் கலக்கங் கொண்டு அஞ்சுகின்றனர். இந்தச்சொல், கண்கூடாகக் காண முடியாத ஒரு கொடுமை யாளனைக் கருத்தில் பதிய வைக்கின்றது. வரம்பு மீறியவனாகவும், வல்லமை மிகுந்தவனாகவும், தடுக்கமுடியாதவனாகவும், உள்ள ஒருவன் நினைவில் வருகின்றான்.

இதனாலேயே ஒரு திசையும் அவனுக்கென உரிமை கூறப்படுகின்றது இங்ஙனமே, எவரும் விரும்பாத ஊர்தியும், அச்சத்தைத் தருவதாகிய படையும், இருளைத்திரட்டி அமைத்தது போன்ற நிறமும், கொடுங்கோன்மையான ஆட்சியும், முறையற்ற தண்டனையும் கற்பிக்கப் பட்டுள்ளன. பேசப்பட்டும், எழுதப்பட்டும் உள்ளன வல்லாமலும்; அதையே மெய்ப்பிக்கின்ற வடிவங்களும், அதனைக் கொண்டாடும் விழாக்களும் உள்ளன.

வேள்வி முதலிய வைதிக வினைகளும், இதை மெய்ப்பிக்கும்படி, மந்திரமொழிகளும், இதற்கிடமும், செயல்களும் வகுத்துள்ளன. வைதிக வினைஞர்களும் இவற்றை நடைமுறையில் கையாண்டு வருகின்றார்கள்.

இவையனைத்தும், அறியாக் குழந்தைகளை அச்சுறுத்தி அடக்கி ஆளக்கருதிய, அறிவிலாத் தாய்மார்கள் கையாண்டு வரும் பொய்க் கூற்றுகள் போன்றவை. அவர்கள் கூறும் சொற்களாவன. பேய் வருகின்றது பேசாதிரு, பூதம் வருகின்றது உண்டுவிடு. காட்டேரி வருகின்றது உறங்கு, என்பன போன்ற போலிச் சொற்களும் செயல்களுமே இவையாவும்.

கற்றறிந்தோரும், இப்படிப்பட்ட காலனை ஒப்புக்கொண்டதாகவே கவிகள் புனைந்துள்ளார்கள், அவர்கள் உண்மை யறியாமல் அவ்வாறு புனைந்துள்ளார்கள் என்பதல்ல. பழக்கப்பட்ட வழியில் நடப்பது போன்று, உலகை நோக்கியே அவ்வாறு புனைந்துள்ளார்கள்.

"காலன் வருமுன்னே கண் பஞ்சடை முன்னே" என்றும் "எப்போதாயினும் கூற்றுவன் வருவான்" என்றும் இன்னும பல படித்தாகக், காலன் என்ற ஒருவனே உடன் பட்டு ஞானிகளும் பாடியுள்ளார்களே; அவர்கள், காலன என்றதன் பொருளேயறியாமை யால், அவ்வாறு பாடினூர்கள் என்பதல்ல. உலகிற்கு உண்மை உணர்த்தவும், நிலேயாமையை நினேப்பிக்கவும். செய்யத் தக்கதற்கு விரைவு கற்பிக்கவுமே, அவர்கட்கு நோக்கமாதலால், உலகம் பழகிய சொற்களாலேயே, அவர்கள்கருத்தை யறிவித்தார்க ளென்பதே கொள் ள்க் கிடக்கின்றது.

இனி, 'காலன்' என்ற சொல்லிற்கு; பொருள் என்னேயோ வெனின்?

'காலம்' என்ற சொல்லே, காலன் என்று ஈறுதிரிந்து, போலியாக வழங்குகின்றது. உடம்பினின்றும் உயிரைப் பிரிப்பது எதுவோ ? அதுவே காலம். தோற்றி நிறுத்தி அழித்தலாகிய முத் தொழிலில் அழித்தலே முதன்மையான தொழில். இத்தொழில் நடை பெருவிடில் மற்றைய இரு தொழில்களும் நடக்க இடந்தராது உலகம். முத்தொழில்களும் நடந்தவண்ணமே நிகழ்ந்தாலன்றி, உலகம் என்ற சொல்லிற்கே பொருள் பெறப்படாது. உலகம் நடை பெற வேண்டின், உடம்பினின்றும உயிரைப்பிரித்தே யாக வேண்டும. இத்தகைய முதன்மைத் தொழிலே மேற்கொண்டு, செய்வது காலம் தான் ; காலனல்ல.

காலமோ ? உருவமற்ற ஒரு பொருள். இது, கழிந்தது, கழிகின்றது, கழிவது என்றும்; வந்தது வருகின்றது, வருவது என்றும் ; நிகழும் வழக்கிற்கு முதன்மையாக உள்ளது. இது பொழுதைக் குறிப்பிடும் சொல்லாகும். இம்மி என்ற நுண்ணளவு கொண்டு மற்றைப் பொருள்களின நுண்மை குறிக்கப் படுவது போன்று; இமை, என்ற கண்ணிமையின் செயலளவும்; நொடி என்ற விரல்களின் செயலளவுங் கொண்டு, நுண் பொழுது முதல் பேரூழி வரையும் உள்ள, காலம கருதப்படுகின்றது. இதை, நேரம் எனவும் வழங்குகின்ரேம்.

இந்தக் காலம், எல்லாம் வல்ல இறைவன் ஆணையால் இயங்கும் கதிரவன் போக்கால் அளவிடப் படுகின்றது இந்தக் காலமேதான், உடம்பிற்கும் உயிருக்கும் உள்ள உறவைக்கூறு படுத்துவதாகின்றது அதாவது, பிரித்து விடுகின்றது. இதனாலேயே இக் 'காலம' கூற்று எனும் பெயா பெற்று வழங்கப்படுகின்றது.

இக்கருத்தைக் கொண்டேதான் "சென்றது சென்றது வாழ் நாள் செறுத்துடன, வந்தது வந்தது கூற்று" எனவும், "தோற்றஞ்

சால் ஞாயிறு நாழியா வைகலும், கூற்ற மளந்து நும் நாளுண்ணும்'' என்றும் கூறியுள்ளார்கள் பெரியோர்கள். இதனால், வாழ்நாளைச் செறுப்பதும், நாளை உண்ணுவதுமே, கூற்றத்தின் செயலாம் என்பதறியக் கிடக்கின்றது. இந்தச் செயல், காலத்தினிடமேதான் அமைந்துள்ளது. இதனாலேயே "நாளென வொன்று போற் காட்டி உயிர் ஈரும், வாளது'' என்ற பொய்யா மொழி, இப்பொருளையே தெளிவிக்கின்றதை நுணுகி நோக்கப் புலப்படும்.

இவ்வாறு காலம் தான்; உடம்பையும் உயிரையும் கூறுபடுத்துகின்றது. இதனால் கூற்றெனப் படுகின்றது. இதனையே, உலகம் பொய் வழக்காக மாற்றி, கூற்றுவன் என்று வழங்குகின்றது. மக்களுலக மட்டுந்தான் இங்ஙனம் மாற்றி வழங்குகின்றதென்பதல்ல; நூல்களும் பெரு வழக்காக இவ்வாறே வழங்கக் காண்கின்றோம்.

ஆதலால், கூறுபடுத்துவதையே தொழிலாக, கண்ணுங் கருத்துமாய்க் கொண்டு இயங்கும் காலம்; ஊழ் முடிவுற்றவன் யாவன், எவனுக்கு ஊழ் முடிந்தது; என்று ஆளைத்தேடி உழல்வது போன்று உடனிருந்தே நோக்கியுளது. கட்டளைத் தவறாமல் நிறை வேற்றுவதானதால். கருணை யற்றது எனப் பேசுவதற்கு இடமேது? கருவைப் பிதுக்கிப், பிள்ளையை, தாய் அலறும்படி கொண்டேகுவ தாதலால்; அங்ஙனம் கருத இடமில்லை. காலத்தின் வேலை, இங்ஙனம் கண்டிப்பாய் இருப்பதைக் கருதியே நமது பொய்யில் புலவர், "ஒருபொழுதும் வாழ்வதறியார்'' எனவும், "நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும் பெருமையுடைத்து இவ்வுலகு'' எனவும், உலகியல்பு கூறியது போன்று, கால இயல்பையே கூறியுள்ளார்.

சடகோபாழ்வார் முதலிய பெரியோர்களும் "மின்னின் நிலையில் மன்னுயிராக்கைகள்'' என்றும்; அகலு மிவ்வுடல் மினின்விரைந்து'' என்றும், உடம்பின் நிலையின்மையை வலியுறுத்தியது போன்றே, காலத்தின் கட்டளையை வெல்வதற்கு எவராலும் முடியாது. காலக் கட்டளை, உடம்பை ஒழித்தே விடும் என்று உறுதி கூறியுள்ளார்கள்.

இதனால், உடம்பு நிலையிலது இதுகாலத்தின் கைக்குட்பட்டது. காலம்; பழவினைப் பயன் முடிகிறதா? முடிந்ததா? என்று பார்த்தவண்ணம் காத்திருக்கின்றது. இவ்வுடம்பும்; ஊழ்வினைப் பயனின் ஒரு பகுதியாகவே ஒன்றி யிருப்பதால், ஊழ் முடிவே உடம்பின் முடிவாக அமைகின்றது; என்பது தெளியப்படுகின்றது. "வினைப்போகமே ஒரு தேகங் கண்டாய்; வினைதானொழிந்தால் தினைப்போதளவும் நில்லாது கண்டாய்'' என்ற மெய்மொழி, கண்கூடாகக் காட்டுவதாகக் கூறியுள்ளது. இதனைக்காணும் பொழுது, பழவினையின் பயனளவே தான்; உடம்பின் அளவு என்பதும், அப்பயன் முடியும் வேளையேதான், உடம்பு முடியும் வேளை என்பதும், இந்தவேளைதான் காலம் எனப்படுவது, என்பதும் தெளிவாகின்றன.

இன்னும், காலம் ஆய்விட்டது, என்ற பொழுதே: உயிர்போய் விட்டது, உடம்பு வீழ்ந்துவிட்டது, என்று உலகங் கொள்ளுகின்றது இது உண்மை. கூடு கிடக்கக், குஞ்சு பறந்து விடுவதே போல், அரசனது உடம்பாகட்டும், ஆண்டியது உடம்பாகட்டும், ஊழ் முடியின்; உதிர்ந்து விடுவது தடை படாது. ஊழ் நுகரப்படும் காலந்தான், ஈண்டு ஊழெனும் பெயரால் வழங்கப்படுகின்றது.

ஊழால் உயிர் பிரிக்கப்படுங் காலமே, இதற்கென வேறோர் உடம்பு உண்டு பண்ணப்பட்டு, முடிவடைந்துள்ள காலமாகும், அதுவும் வேறொரு உடம்பினுள்ளேயே அமைக்கப் பட்டிருக்கும். இவ்வுயிரை அவ்வுடம்பினுள் கொண்டு சேர்ப்பது ஊழேதான்.

இத்தகைய, உருவ மற்ற பொருளைக் கொண்டு, செய்யப்படும் இவ்வேலை, மிக உயரியதும், பிறர் எவர்க்கும் அரியது மாகும். இது இயல்பாய் நிகழ்வதன்று. இதனை, உருவமற்ற ஊழே தான் செய்ய வல்லது. ஈண்டுக் காலத்தையே ஊழெனக் குறிப்பிடுகின்றேன். வினை தானொழிந்தால் தினைப்போதளவும் நில்லா தென்பதை, நுணுகி நோக்கவும். ஊழ் முடிவும், உடலின் பிரிவும் ஒற்றுமையாய் நிகழ் வதாயிருப்பதால்.

இத்தகைய காலக் கோள் பட்ட நிலையைத் தான் "காலன் துறவீவது" என்று கூறினர்கள். இந்தத் துறவு, எவருக்கும் கிடைக் கப் பெறுவது. விரும்பாமலே அடையப்படுவது. இத்துறவு. பட்டத் தையும் பதவியையும் பாராமலே கொடுக்கப்படும். பணத்தையும் பெருமையையுங் கருதாமலே தரப்படும். இளமையையும் இனத் தையும் எண்ணாமலே திணிக்கப்படும். இதுவே மீண்டும் கருவில் பூட்டும், பிறப்பை ஈட்டும், மீண்டும் ஊழையூட்டும், மூப்பில் முழுக்கும் முன் போன்று மீண்டும் துறவேதான். இஃதொரு சுழல், இப்படிச் சுழல் வேலையில் அகப்பட்டவர்க்கு பல கோடி பிறப்புகள் கழியினும் முற்றுப்புள்ளிக்கே இடமில்லை யென்பது உறுதி.

இப்படி, பிறப்பதும், இறப்பதுமாக, ஓயாதலையும் வேலையால் பெருந்துன்பம் எனவறிந்து, இத்துன்பத்திலிருந்து விடுபடக் கருகிய நல்லோர்கள்; கால மாகிய காலன், துறவு கொடுப்பதற்கு முன்னரே, இச் சுழல் வட்டத்திளின்றும் விலகி நிற்பதற்கு ஆவனவற்றை நீள நினைந்து, உறுதி பூண்டு, தாமாகவே துறப்பார்கள்; என்பதனை, அடியில் வரும் அவிரோத உந்தியார் உணர்த்துகின்றது காண்பாம்.

**(கசூ) அ — உந்தியார் :—**

எல்லோர்க்கும் காலன் துறவு ஈவன் ஈயாமுன்
நல்லோர் துறப்பர் தாம் உந்தீ பற
நன்றறி வார்க ளென்று உந்தீ பற.

பொழிப்பு :—

காலன் எல்லோர்க்கும், துறவு ஈவன். ஈயாமுன், நல்லோர் தாம் துறப்பர். (அவர்கள்) நன்று அறிவார்கள் என்று, உந்தீ பற; உந்தீ பற.

பொருள் :—

'காலன்'— (காலன் என்று இறுதிப் போலிச் சொல்லால் வழங்கப்படுகின்ற, இமைப்பொழுது முதலிய) காலம், 'எல்லோர்க்கும்' (மக்கள், தேவர், நரகர், வேந்தர், குடிகள், வேலையாளர், செல்வர், வறியர், ஆண், பெண், அலி, ஆகிய) யாவர்க்கும். 'துறவு'—(உடம்பு, உற்றார், உடைமை இவற்றை விடுத்து, தனித்துச் செல்லும்) துறவு நிலைமையை; 'ஈவன்' — (விருப்பம் இலதே யாயினும்) (அஃறிணை முடிபாக் கொள்ளின்) கொடுப்பது உறுதி. 'ஈயாமுன்' — (வாழ் முடிபாங் காலம் அவ்வாறு துறவைக்) கொடுப்பதற்கு முன்னரே 'நல்லோர்' — மெய்யுணர்வுடையோர்கள், 'தாம்' — தாங்களாகவே; 'துறப்பர்' — (உடம்பில் யானெனும் அகப்பற்றையும்; உறுதுணை யென்றிருந்த புறப்பற்றுகளையும்; மனதாலும் எண்ணாமல்) விடுத்து நிற்பர். (அவர்களே) 'நன்று'—நன்மையாகிய உறுதிப் பொருளை, 'அறிவார்கள்'—அறிபவர்கள் ஆவார்கள்; 'என்று உந்தீபற'—என்று பாடிக்கொண்டே உந்திப் பறவுங்கள்; சிறுமிகளே உந்திப் பறவுங்கள் என்பதாம்.

இது கதிரவன் முதலிய அளவைகளால் அளவிடப்பட்ட காலமாகிய கூற்று; நமது உடம்பை, பொழுது கழிக்கின்றது என்னும் பெயரால் நொடி தோறும் அறுத்துக் கழிக்கின்றது. வாழ் முடிவில், உடம்பையே ஒழித்து விடுகின்றது. அப்பொழுதே பற்றனைத்தும் துறக்கப் படுகின்றன, இவ்வாறு எல்லோர்க்குமே காலம் துறவு கொடுப்பது உறுதியென வறிந்து, அதற்கு முன்னரே, நல்லவர்களா யுள்ளோர், தமது செயலாகவே துறவடைவார்கள் அவர்களே ஆன்மப் பேற்றைப் பெறுவார்கள் என்கின்றது.

எடுத்துக் காட்டு :—

சித்தாந்த கரணம் :—

"எல்லோர்க்கும் காலன் துறவீவன் ஈந்த பிற்கேள்
பல்லோரும் ஆய்ந்த மனைப் பாலுடலை—ஒல்லையினில்
வைப்பர் சமாதி யிந்த வாறவர்செய் யாமுன் நலோர்
அப்பரிசே தாம்புரிவ ரால்"

(தொடரும்)

# பிறவியைப் பழித்தல்.

## தவத்திரு சுவாமி அருணகிரிநாதரவர்கள்
(நாராயணதேசிகர் நிலையம், சென்னை)

முன் (ம 2 இ 4 ப 77) தொடர்ச்சி

**மாணவன்**—ஏ குருநாதா யான் செய்த தேவாலய வழிபாடும் தீர்த்தாடனமும், தல யாத்திரைகளும், ஜபாதிகளும், யோகாப்பியாசங்களும், தானதருமங்களும், எல்லாக்கருமங்களும் இகலோக பயன்களை அனுபவிக்கவும் பரலோக பயன்களை அனுபவிக்கவும் கருதியே (சகாமமாய்) செய்ததே யல்லாமல், எவ்வித பயனையுங் கருதாமல் (நிஷ்காமமாய்) செய்யவில்லையே நீ என்று, கன்னத்தில் அறைவது போல் கேட்டீர்களே, யான்செய்த நற்செயல்கள் அனைத்தும் நிஷ்காமத்தாலல்ல சகாமத்தாற்றான் என்பதை எவ்வித அறிகுறிகளால் தெரிந்து கொண்டீர்கள்?

**குரு**— ஏ மாணவ! எவனொருவன் குருவினிடத்திலும் சரி, நுண்ணிய அறிஞர்களிடத்தும் சரி வினயத்தோடு அச்சமின்றி தனது ஐயப்பாடுகளை கேட்கின்றானோ அவன்தான் உண்மைப் பொருளை உள்ளவாறுணர்ந்து தெளிவடைய முடியும். உன்கேள்வியை மிகவும் மெச்சுகின்றேன் நீசெய்த கருமங்களனைத்தும் நிஷ்காமமாய்ச்செய்யவில்லை, சகாமமாய்த்தான் செய்தாய் செய்கின்றாய் என்பதனை காட்டக்கூடிய அறிகுறிகள் நின்னிடத்தில் காணப்படுகின்றன. அவைகளை எடுத்து விளக்குகின்றேன் அதனைக் கேட்டுத் திருந்தி உண்மை யுணர்வாய் என்று நம்புகின்றேன். யான் இறுதியாகச் சொல்லக்கூடிய இவைகளை நன்றாய் கவனித்துக் கேட்பாயாக.

ஏ மாணவ! உன்னைவிட செல்வத்திலும், கல்வியிலும், புலமையிலும், ஒழுக்கத்திலும், உயர்ந்தோர்களாயிருப்பவர்களைக் கண்டு பொறாமைப் படுகின்றாய். அவர்களைப் பற்றிக் குறைகூறுகின்றாய் பிறரிடம், இதனால் பொறாமை யெனும் பேய் நின்னைவிட்டு ஒழியவில்லையெனத் தெரிகிறதல்லவா.

மற்றும் யான் உயர்குடியில் பிறந்தவன், பிறவிச் சைவன் அவனோ! தாழ்ந்த குடியிற் பிறந்தவன் அசைவன்; யானோ! எம், ஏ. படித்தவன், பன்மொழிப் புலவன், பன்னூலாசிரியன், சிறந்த எழுத்தாளன், பல ஆதினங்களாலும், அரசாங்கத்தாராலும் பொன்னாடை போர்த்தி பொற்கிழியளித்து புகழப் பட்டவன் என்ற அகம்பாவம் நின் தலைக்கேறி விட்டது என்பதை உனது சொல்லுஞ் செயலும்

சுட்டிக் காட்டுகிறதல்லவா! இதனால் நீ நிஷ்காமியல்லவெனத் தெரிகிற தன்றோ!

மற்றும் தன்னலத்திற்கு மற்றொருவன் வாழ்வு தடையாக இருக்கிறதெனஎண்ணி அவனை ஒழித்தாலல்லது உறங்கேனென்று சூளுரைத்து அவனை பலவகையிலும் துன்பப்படுத்தி உயிரைப் போக்க நீ செய்யுஞ் செயல்கள் புலப்படுத்துகிறதன்றோ! நீ நிஷ்காமி யல்லவென்று.

தன்னிஷ்டப்படி நடக்கவில்லையென பிறர்மேல் அனற்பொறி சிந்தும்படியாக நீ எரிந்துபேசுகின்ற கோபத்சுழலாலும், கற்பனை யாகிய சாதிச்செருக்காலும், அழிந்துபோம் உடம்பில யான் எனகின்ற அகம்பாவத்தாலும் நிலையில்லாத செல்வப்பொருளினிடத்து என தென்கின்ற மமகாரத்தாலும் அறியக்கிடக்கின்றதன்றோ! நீ நிஷ் காமியல்லவென்று.

அதன்றியும் நீ விவேகிகள் விரும்பத்தகாத நியாய விரோத மான கடுமொழிகளைப் பிரயோகித்து உலகின்கண் எல்லோரும் விரும்புதலால் எங்களுடைய மதமே (கொள்கையே) உயர்வானதென பயனற்ற விதண்டா வாதத்தை நீ செய்வதாலும் தெரிகின்றதன்றோ. நீ நிஷ்காமி அல்லவென்று.

அஃதன்றி தனக்கும் பிறர்க்கும் பயன்தரத்தக்க விசாரணையை விடுத்து பழக்கமே பெரியோரொழுக்கமென காலங்கழிப்பவர்களை நல்லோரெனப் புகழ்ந்து பேசியும், மெய்மையாகிய ஆன்மஞானத்தை ஐயம திரிபற பரோபகாரமாகப் போதிக்கும் பெரியார்கள் முன் சென்று அகங்கார வார்த்தைகளைப் பேசுகின்றதாலும், பெரிய அலை களை வீசுகின்ற கடல் சூழ்ந்த உலகமுழுவதும் தமது புகழ் வியாபிக்க வேண்டுமென்று நீ ஆசைப்படுவதாலும், நீ நிஷ்காமியல்லவெனத் தெரிகின்றதன்றோ!

சர்வ வியாபகனாயுள்ள ஆண்டவனிடத்து உண்மையான அன்பு இன்மையாலும், மற்றமொழிகளிலும் உண்மையை உரைக்கும் பெரியோரிடத்தும் நம்பிக்கை இன்மையின்மையாலும் அழியும் பொருள்களிடத்துள்ள ஆசையை நீக்கும் விராகமின்மையினாலும், தெரிந்த ஞானவான்களிடம சென்று விசாரித்தறிய வேண்டுமென்கிற வேட்கையும் முயற்சியு மின்மையினாலும் நீ நிஷ்காமியல்லவென்று அறியக் கிடக்கின்றதன்றோ? ஆதலால ஐயமுந்திரிபும் அறாமல் நீ கற்ற நூல்களால் அடைந்தபயன யாது. அழியாத ஆன்மாவினோடு

நிலையாக நிற்பது எந்த வுலகம்? எந்த உடம்பு எந்த மதம்? நீ சொல்வாயாக. இதன்றி அளவிறந்த பிறவிகளை எடுத்து அழிவித்ததையும் நீ எண்ணிப்பார்க்க வில்லையே, இது என்ன அதிசயம் மாணவ! நன்ருகச் சிந்தித்துப் பார்த்து இப்பிறவிப்பயனை அடைவதற்கேற்ற சாதனத்தைப் பெற்று பேரின்ப வாழ்வை அடைவாயாக.

மேற்கோள் ("அநுபவா நந்த தீபிகை")

சைவமறந்திலை கர்வமொழித்திலை சன்மம்விடுத்திலையால்
காய்சினம் விட்டிலை உடல்பொருள் குலவபி மானங்கழலையால்

வெவ்வுரை தந்தெம் மதமே பெரிதென வீண்வா தாடுவையால்
வீணர்தமைப்புக ழாமெய் ஞானிமுன் வீம்புகள்பேசுவையால்

பவ்வநெடுந்திரை சூழ்புவி மேற்புகழ் பரவ விரும்புவைமெய்ப்
பத்திசிரத்தை நிராசை விசாரணைபற்றலை கற்றதிலென்

எவ்வுலகோசதம் எவ்வுடலோசதம் எம்மதமோ சதம்நீ
எண்ணறுபிறவி எடுத்தழி வித்ததை எண்ணலை என்னிதுவே

— முற்றும். —



## நாடு.

**தவத் திரு. ஐயாறு அடிகள்.**
சித்தபாலைய தேசிகர் ஆதீனப்புலவர், பழநி.

"நற்றவம் செய்வார்க்கிடம், தவம்செய்வார்க்கும் அஃதிடம்" சீவக சிந்தாமணி. என்றபடி. நிறைந்த விளைபொருள்களாகிய நெல் முதலிய தானியங்களை விளைவிக்கும் உழவர்களைத் தன்னகத்தே கொண்டது நாடு. உழவு என்றசொல்லுக்கு முயற்சி என்று பொருள். உழ என்னும் சொல்லடியாகத் தோன்றியது உழவு என்னும் சொல். உழ—பகுதி. உ-தொழிற்பெயர் விகுதி. உழப்பு, உழைப்பு என்ற சொற்களும் உழ என்னும் சொல்லடியாகவே பிறந்தவை. உழவு, உழப்பு உழைப்பு, என்பன ஒருபொருட்கிளவிகளே எனினும் உழவு என்ற ஏரான் உழுதலைச் செய்யும் தொழிலினைக் குறிப்பதாகும். உழப்பு, உழைப்பு என்பன ஏனைய தொழில்களைக் குறிப்பன. தொழில்கள் பலவற்றுள்ளும் சிறந்தது உழவுத்தொழிலே. அத்தொழிலால் வரும் செல்வமே சீர்மையுடையது.

"மேழிச்செல்வம் கோழைபடாது" ஔவையார்.
"உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை" ஷை
"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்"
என்றார் திருவள்ளுவதேவர்.

மழையுளதேல் மாநிலத்தார்க் கெல்லா வளனுமுண்டு. இன்றேல் எவ்வகை நலனும் இன்றாம். "மழையின்றி மாநிலத்தார்க் கில்லை" நான்மணிக்கடிகை. யாங்ஙனமெனின், பசிப்பிணிகளையும் உணவுப் பொருள்களை மிகுதியாக விளையச்செய்யும் உழவர்கள் ஏரினைப் பிடித்து உழுதலைச் செய்யாமல் கைவிடுவர்.

"ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்"
திருவள்ளுவப் பெருந்தகையார்.

நமது முன்னோர்கள் பலமுயற்சிகளுள்ளும் நிலத்தினைப் பண்படுத்தி நெல் முதலியதானியங்களை விளையும்படி செய்யும் முயற்சியே சிறப்புடைத்தெனக் கொண்டவர்கள். எனவே, அம்முயற்சியே சிறப்புடைத் தென்பது தோன்ற உழவு என்றார் திருவள்ளுவர். ஏராலேசெய்யும் முயற்சி பூமியைத்திருத்தி உணவுப்பொருளை விளைவித்தல். உழவுத் தொழிலடியாகவே பண்டம் மாற்றல் முதலிய பிறதொழில்களும் உளவாம். ஒருவன் ஒருவேளை உணவின்றி

வெளியே உலவினும் உலவக்கூடும். உடையின்றி வெளிவர ஒண்ணாது ஆடையில்லான் அரைமனிதன் என்பது பழமொழி. உடைக்குக் காரணமாய நூலைத் தரும் பருத்தியும் உழவினாலேதான் உளதாக வேண்டியிருக்கிறது. எனவே மழையின்றேல் உழவும் அதன் காரணமாகப் பிறதொழில்களும் விழுவனவாம். எனவே, மக்கள் ஒருவரை ஒருவர் பறித்தல், ஒறுத்தல், வருத்தல், வறைத்தல் முதலிய தியமுயற்சிகளில் தலையிடுவர். தியமுயற்சிகட்குக் காரணம் ஏரல்ல. வில், வாள், வேல் முதலியன தாம் தியமுயற்சிகட் கருவியாவன.

நமது திருவள்ளுவ தேவனார் பொருட்பால், குடியியலில், உழவு என்ற அதிகாரம் குறிப்பிடுகின்றார். அதிகாரப்பொருள் கூற வந்த ஆசிரியர் பரிமேலழகர் உழவரது சிறுபான்மை வாணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கும் உரித்தாய உழுதல் தொழில் செய்விக்குங்கால் ஏனையோர்க்கும் உரித்து என்றார். இதற்குப் பரிப்பெருமாள் கூறுவதென்னையோ என்னின் உழவு, தொழில், வரைவு வாணிகம், சிற்பம், வித்தை, என்று சொல்லப்பட்ட அறுவகைத் தொழிலும் குடிசெய்வார்க்கு வேண்டும் அன்றே? அவை எல்லாவற்றின் இயல்பும் கூறாதார் உழவு ஒன்றும் கூறியது எற்றுக்கெனின் அவற்றுள் கல்வி பொருள் தரும் என்பது முன்பே கூறப்பட்டது தொழிலாவது ஒருவன் ஏவல் செய்தல். அரசர் ஏவலால் அமைச்சர் செய்யும் தொழில் அமைச்சியலுள் கூறப்பட்டது. ஏனையோர் செய்யும் தொழிலும் வரைவு, வாணிகமும், சிற்பமும், மேலையதிகாரமாய, குடிசெயல்வகையில் "ஆள்வினையும் ஆன்ற அறிவும், என இரண்டின், நீள்வினையான் நீளும்குடி" என்ற அதனால் கூறினாராம். என்னை! அவை எல்லாம் முயற்சியானும், அறிவானும் வருதலின்; ஆயின் உழவும் அதனுள் அடங்காதோ எனின் அடங்கும். அஃது ஈண்டுத் தொழிலை நோக்கிக் கூறியதன்று. முபன்று பொருள் ஈட்டினார் எல்லாரும் குடி ஓம்புங்கால் தானியத்தால் ஓம்ப வேண்டுதலின் அதனை உண்டாக்க வேண்டும் என்று கூறப்பட்டது. உழவுத்தொழில் செய்யாமல் பிறதொழில்கள் மேற் செல்வார் அனைவரையும் தாங்குவர் ஆதலால் உலகத்தவராகிய தேருக்கு உழுபவரே அச்சாணியன்னராவர் உழுதுண்டு வாழும் வாழ்வே சுதந்திர வாழ்வு. பிறரிடம் சென்று இறப்பவர் சுற்றத்தையும், புறப்பவர் கொற்றத்தையும் உழவினிடத்தே விளைப்போர் உழவர்.

"இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும்
உழவிடை விளைப்போர்"

சிலப்பதிகாரம், நாடு, காண்கதை 149-150

பொருட்பாலில் பொருளியல் என்னும்யல் வகுத்து 'நாடு' என்னும் அதிகாரத்தை முதலதிகாரமாகக் கொண்டனர். மணக்குடியரும், பரிப்பெருமாளும். "தக்கார் சார்வது நாடு"

"தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு"

நாடு என்னும் அதிகாரம் முதற்குறட்பா பரிமேலழகர் தக்கார் என்னும் சொல்லுக்கு அறவோர் என உரைவரைந்து அறவோர், துறவோர், அந்தணர் முதலாயினர் என வரைந்தமை காண்க. தகுதி என்ற சொல்லுக்கு நடுவுநிலைமை என்பது பொருள்.

"தகுதிஎன ஒன்று நன்றே பகுதியால்
பாற்பட் டொழுகப் பெறின்" —குறட்பா.

இத்திருப்பாவில் 'தகுதி' என்ற சொல் நடுவுநிலை என்ற பொருளினைத் தந்து நின்றமை காண்க.

"தக்கார் தகவிலர் என்ப தவரவர்
எச்சத்தாற் காணப் படும்" —114-குறட்பாவிலே

தக்கார் என்ற சொல் நடுவுநிலைமை யுடையோர் என்னும் பொருள் தருதல் காண்க.

நடுவுநிலை தவறாமல் நின்றொழுகவல்ல மனமாண்புடையர் துறந்தழி ஒருக்காலும் நடுவுநிலை தவறமாட்டார் எனக் கருதியே பரிமேலழகா இங்ஙனம் இயம்பினர் போலும். அறம் முதற் பொருள்களை உள்ளவாறு உணர்த்த வல்லார் துறவியரே. எனவே இத்தகைய துறவியர் சேர்ந்து வாழப்பெறுவதே நாடு. வழங்க வழங்கத் தொலையாத செல்வாகள் சேர்வதே நாடு. உழவர், செல்வர் என்னும் இருபாலார்க்கும் அறநெறியினை உணர்த்தவல்ல தக்காரை

"தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு" —என்னும்

அதிகார முதற்பாவிலே நடுமணியாக அமைத்த தேவர்திறனை உள்ளுதோறுள்ளு தோறுள்ளுமுருகும்.

காளிங்கர் என்னும் திருக்குறளாசிரியர், தக்கார் என்ற சொல்லுக்கு தகுதியால் சிறந்த கல்வியும் ஞானமும் உடையோர் என்றூர். இக் குறட்பாவினுல் உழவரும, தக்காரும், தாழ்விலாச் செலவரும சேருவது நாடு என்பதி பெறப்பட்டது எனினும் நல்லோரைத் தன்னகத்தே கொண்ட நாடுதான் நவிலொணுத கருத ஒணுத நலம்பல படைத்தது என்று கொள்ளலாமோ என்று கருதுகின்றேன்.

"நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை" ஔவையார்.

"எவ்வழி நல்லவர் ஆடவர், அவ்வழி நல்லை நீ
வாழியநிலனே" புறநானூறு.

'பெருந்துறவி' என மாதவச்சிவஞான யோகிகளால் பாராட்டப் பெற்ற திருநாவுக்கரசரும், இருமனைவியரை மணந்து மனையற நடாத்திய சுந்தரரும தோன்றிய திருமுனைப்பாடி நாட்டினைச் சிறப்பிக்கத் தொடங்கிய சேக்கிழார்.

"மறந்தரு தீநெறி மணிகண்டர் வாய்மைநெறி
அறந்தரு நாவுக்கரசும் ஆலால சுந்தரரும்
பிறந்தருள உளதானல் நம்மளவோ பேருலகில்
சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடும் சீர்ப்பாடு"

என்று உளமுவந்துரைத் தமைகாண்க.

நிறைந்தபொருள் உடைமையால் அயல் நாட்டவராலும் விரும்பத் தக்கதாய் கேடின்றிய விளைவினை உடையதே நாடு. வாய்மொழியாற் புகழ்நிறைந்த நன்மாந்தர், வாய்மையினை நடுவு நிலை தவறாது எடுத்துரைக்கும் இயல்பினை யுடையார் சேர்ந்த நாட்டின் நலனை நவில்பவர் யாவர் எவருமிலர்.

"பொய் யறியா வாய்மொழியாற்
புகழ்நிறைந்த நன்மாந்தர்"

மதுரைக் காஞ்சி 19-20 மாங்குடி மருதனர்.

அயல் நாடுகள் பொறுத்தபாரம் எல்லாம் தன்னகத்தே ஒருசேர வருங்காலத்தும் அவற்றைத்தாங்கி, அதற்குமேல் அரசனுக்கு இறுக்கவேண்டும இறைப்பொருளை உடம்பட்டுக் கொடுப்பதே நாடாவது.

"பொறை யொருங்கு மேல்வருங்கால் தாங்கிஇறைவற்
குறை யொருங்கு நேர்வது நாடு."

பொறை ஒருங்கு தாங்குதலாவது, அயல் நாடுகள் வறுமையுற்று அவற்றைத் தாங்குகின்ற பொறுப்பு தன்னிடத்தே வந்ததாயினும் தாங்குதல்.

உழவர்களைத் தன்னகத்தே உடைமையினுலும், மிகவிளைதலாலும் உயிர்கள் பசியின்றி வாழப்பெறுவதே நாடு. நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்றபடி நோயாளர் இன்றி இயல்வதே நாடு. பகைமையின்றிய நாடே நாடாவது மாறுபட்ட பல கூட்டமும், பாழாக்கும் உட்பகையும், அரசனை வருத்தும் கொலைவினையாளராம் குறும்பரும் இல்லாததே நாடு. பகைவராலும் ஏனைய வகையாலும் கெடுதல் என்பதனை அறியாத தாகி, அரிதே கெட்டதானுலும வளம் குறையாத நாடுதான் தலைமையான நாடாகும். நோயின்மை, செல்வம, விளைபொருளையுடைமை, இன்பம், காவல் என்னும் இவ்வைந்தனையும் நாட்டிற் கணிகலமென நவில்வர்

புலவர் பெருமக்கள். பிணியின்மை—நிலநலனால் வருவது. செல்வம்—பொன்னும் பசுவும் பலவாயின மிகுதல். விளைவாவது—பல தானியங்களும் பொலிவுடைமை. இன்பமாவது-கண்டு, கேட்டு உண்டு உயிர்த்து உற்று இன்புறப்படும் இன்பப்பொருள்களை உடைமை. காவலாவது—வேற்றரசனாலும், தன் அரசனாலும் நலிவு இன்மை.

"பிணியின்மை செல்வம் விளைவின்ப மேமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து"

புறத்திலே போய் ஒன்றும் தேடாமல் நானாவகையான செல்வமும் உடைத்தாயிருப்பதே நாடு. அல்லது நாடென்று சிறப்பித்துரைக்கப்படும் தகுதியினை யுடையதாகாது.

இதுகாறும் கூறிய தன்மைகளையுடையனாயினும் வேந்தனோடு மேவுதல் இன்றிய நாடு பயனுடைய தாகாது வேந்தனது அமைதியை உடைத்தலலாத நாடு பயனிலதாம். வேந்தனுடன் மேவுதல் உடையதும், வேந்தனது அமைதியை யுடையதுமாய நாடே நன்னாடாம்.

அரசனது நீதி தவாதேல் கோள்நிலை திரியாது. அங்ஙனமாகவே மாரி வறங்கூராது. வறங்கூராமல் மழை பொழியுமேல் மன்னுயிரெல்லாம் மன்னன் தன்னுயிரெனும் தகுதியுடைத்தாகும்.

"கோனிலை திரிந்திடிற் கோள்நிலை திரியும்
கோள்நிலை திரிந்திடின் மாரிவறங்கூரும்
மாரிவறங்கூறின் மன்னுயிரில்லை
மன்னுயிரெல்லாம் மண்ணாள் வேந்தன்
தன்னுயிரென்னும் தகுதியின்றாகும்" மணிமேகலை.

கோள்நிலை திரிந்திடினும் மாரிவறங்கூராது இருப்பது வேந்தனது அறநெறியானேயாம். விளங்கிய சுடரையுடைய ஞாயிறு நான்கு திக்கினும் தோன்றினாலும் விளங்கிய கதிர்களையுடைய வெள்ளி தென்றிசைக்கண்ணே சென்றாலும், மழைவளம் மாறாமல் காவிரி பலகாலாய்ப் பெருகியூட்ட அதனால் வளம் நிறைந்த நாடெனப் படுவது நின்னுடையதே என வெள்ளைக குடிநாகனார் என்னும் புலவர் பெருமகனும் புவிமன்னனும், கவிமன்னனுமாய 'சோழன்' நலங்கிள்ளியைப் பாடினார். அப்பாடலிலேயே, கூர்வேல்வளவ, நின்வின் பொருவியன்குடை, வெயின்மறைக் கொண்டன்றே அன்றேவருந்திய குடிமறைப்பதுவே எனவுங் கூறினர். மேலும், மாரிபொய்ப்பினும், விளைவு குறையினும் இயற்கையல்லன செயற்கையில் தோன்றினும் இடுக்கண்ணகன் ஞாலம் காவலரைப் பழிக்கும். இதனை நன்கனம் அறிந்தனை நீயும். எனவே நீயும் குறளையாளரது உறுதியில்லாத மொழியைக் கொள்ளாமல் உழவர்களைப் பாதுகாத்து அதனால் ஏனைய

குடிகளையும் பாதுகாத்தல் வேண்டும். இவ்வானமாற்றின் நின்பகை வரும் நின்னைப் போற்றுவர் என்றும் கூறினர். புவியரசனும் கவியரசனுமாய பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் நான்பகைவரை வேல்வேனுயின்

"என்நிழல் வாழ்நர் செல்நிழல் காணது
கொடியன் எம்மிறை யெனககண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக"

என்று சூளுரை கூறினன்.

சேரன், செங்குட்டுவன், தண்டமிழாசான் சாத்தனுரால், கோவலன் கண்ணகி காரணமாக மதுரையில் நிகழ்ந்தன கேட்டான். வருந்தினன். நன்னூற் புலவரை நோக்கி எம்மோரன்ன வேந்தனும் பாண்டியற்கு முறைதவறியதால் உளதாய செவியிற் பொருந்துதற்கு உடம்பினின்று உயிரை நீக்கினன். முன்னைவினை வளைத்த பாண்டியனது கோலை அவனது உடம்பினின்று நீக்கிய உயிர் செங்கோலாக்கியது என்று மேலும்.

"மழைவளம் கரப்பின் வான்பேரச்சம்
பிழையுயி ரெய்திற் பெரும்பே ரச்சம்
குடிபுரவுண்டு கொடுங்கோ லஞ்சி
மன்பதை புரக்கும் நன்குடிப் பிறத்தலின்
துன்பமல்லது தொழுதக வில்லென"

உரைத்தான். ஆட்சி எளியதன்று அரியதே.

"ஒருமைந்தன் தன்குலத்துக் குள்ளானென் பதுமுணரான்
தருமந்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்
மருமந்தன் தேராழி யுறஊர்ந்தான் மனுவேந்தன்
அருமந்த அரசாட்சி அரிதோமற் றெளிதோதான்"

திருத்தொண்டர் புராணம்,

கறவை முறைசெய்த காவலனும் மனுவேந்தன், இளங்கோ வேந்தரால் "கறவை முறைசெய்த காவலன்காண் அம்மானை" என்று பாராட்டப் பெற்றான் நமது மனுவேந்தன் மண்ணில் வாழும் மன்னுயிர்கட்குக் கண்ணும் ஆவியும் ஆம் பெருங்காவலன் ஆவான். அறம் பொருளின் பமான அறநெறிவழாது புல்வி ;மறங்கடிந்துலகம் போற்ற வய்யகங் காத்த மாபெரு வேந்தனுவான்.

இம்மன்னவன் "தெய்வ நீர்நாடு" எனவும், பொன்னுட்டவரும் அணைந்தாடும் பொன்னி நீர் நாடு எனவும், சேக்கிழாரால் பாராட்டப் பெற்ற சோழ நாட்டிலே திருவாரூரிலே இருந்து நிலவுலகாண்ட

தொடர்ச்சி: அட்டையின் 3-ம் பக்கம் பார்க்க.

# யோகசிகோப நிஷத்—தமிழ் பொழிப்புரை.

தவத்திரு. திரிமூர்த்தி சுவாமிகள்,
(சாது சுவாமிகள் ஆஸ்ரமம், பழநி)

முன் (ம 2 இ 4 ப 94) தொடர்ச்சி.

**(அ...கை) பிராணனுக்குட்பட்ட ஜீவன் இடையருது ஹம்ஸ மந்திரத்தை ஜெபிக்கின்ருன் எனக் கூறல் :—**

பிராணபானன்கட்கு உட்பட்ட ஜீவன் என்றும் கீழும் மேலும் ஓடுகின்ருன். காற்று இடை பிங்கலைகளின் வழியாகச் சென்று கொண்டிருப்பதால் அறியப்படுவதில்லை, எங்ஙனம கையாலடிக்கப்பட்ட பந்தானது கீழும் மேலுஞ் செல்லுகின்றதோ, அங்ஙனமே பிராணபானன்களாகிய காற்ருல் இழுக்கப்பட்ட ஜீவன் ஓய்வு பெறுவதில்லை. பிராணனை அபானன் இழுக்கின்றது. அபானனை பிராணன் இழுக்கின்றது. இவற்றிற்குட்பட்ட ஜீவன் ஹ என்ற ஒலியுடன் வெளி வருகின்ருன். ஸ என்ற ஒலியுடன் உள் நுழைகின்ருன், ஆகவே ஹம்ஸ. ஹம்ஸ என்ற இம் மந்திரத்தை எப்பொழுதும் ஜீவன் ஜெபித்துக்கொண்டே இருக்கின்ருன் என்று அறிக. ஆகையால் அறிஞன் பிராணனைச் சுழுமுன வழியிற் செலுத்தி நித்தியப்பொருளை அறிவாளுக. அங்ஙனம் அறிவதால் ஜீவநிலையைக்கடந்து உண்மைப் பொருளிற் கலந்து இன்புறுகின்ருன். (54)

**(அ... கை) குண்டலி சக்தியே பந்தமுக்தியின் காரணமெனக் கூறல் :—**

மூலாதாரத்தில் குண்டலி சக்தி இருக்கின்ருள். நாபிக்கடியிலுள்ள நாடிக்கூட்டத்திற்கு மேல் அச்சக்தியை ஏற்றப் பயில வேண்டும். அங்ஙனம் ஏற்றிய உபாசகனுக்கு அவள் முக்தியைத் தருகின்ருள். அங்ஙனம் பயிற்சி செய்யாத அறிவிலிகட்கு பந்தத்தைக் கொடுக்கின்ருள் என்பது அறிக. (55)

**(அ...கை) பிரணவமே எல்லாவற்றிற்கும் இருப்பிடமெனக் கூறல் :—**

யாதொரு அகார, உகார, மகார, வடிவ ஒலியில் முறையே பூலோகம்,மத்யலோகம்,சொர்க்கலோகமாகியமூன்று உலகங்களும,சந்திர

சூரிய, அக்கினி ஆகிய மூன்று தேவதைகளும், நிலைபெற்று விளங்குகின்றனவோ அதுவே பேரொளி வடிவ பிரணவமென்று அறிக. மற்றும் எதனிடத்தில் சென்றது, நிகழ்வது, வருவது, எனப்படும் முக்காலங்களும், பிரம்ம, விஷ்ணு, உருத்திரர்களாகிய மூன்று தேவதைகளும, குறில், நெடில், அளபெடையாகிய மூன்று ஒலிகளும், ருக்கு, யஜுசு, சாமமாகிய மூன்று வேதங்களும் நிலைபெற்று விளங்குகின்றனவோ, அதுவே பேரொளி வடிவ பிரணவம் என்பது அறிக. (57)

**(அ...கை) சுத்தமனதைத் தனதான்ம வடிவென்றே பயில்வது பிரம்ம வமிபாடெனக் கூறல் :—**

மேற்சொன்ன பல்வேறு பயிற்சியால் தமசு, ரஜசுகளின் நீங்கியது சுத்தமனமாகிறது ஆகாய வெளிபோல் நிறைந்த அந்தச் சுத்தமனம் நானுகின்றேன். எங்கும் பரந்தமுகமுள்ள அம்மனம் நானுகின்றேன். எல்லோருடைய ஆன்மாவாய் நிறைமனம் நானுகின்றேன். ரஜசு, தமசுவடிவமனம் ஒப்பற்ற பரம்பொருளாயுள்ள எனது வடிவன்று. எனபது அறிக. மனதை முதன்மையாகக் கொண்டே தொழில்கள் தோன்றுகின்றன. அத்தொழிலினின்று முண்டான பாவபுண்ணியங்களால் அம்மனமே பற்றப்படுகிறது. ஆகையால் அம்மனதைத் தடுத்து மௌனத்தைப் பயில்வாயாயின் புண்ணிய பாவங்கள் தோன்றாது ஒழிகின்றன. ஆகையால் முக்திவிருப்புள்ள புருடன் நன்மனதால் தீமனத்தை நன்கு ஆய்ந்து சிந்தனையற்றதாகச் செய்தல் தக்கது. அங்ஙனம் தீமனம் சிந்தனையற்ற நிலையைப் பெறு-மாயின் அப்பொழுதே காண்டற் கரிதாய சிறந்த பரம்பொருள் உள்ளத்தில் அறிபப்படுகின்றது. யோகப் பயிற்சி கற்றவன் நன்மனதால் தீமனதை ஆராய்ந்து அடக்கி முக்தி எய்துகின்றான். ஆகையால் நன்முயற்சியுளளவன் தீமனத்தை நன்கு விசாரித்து, மௌன நிலையைப் பெறும்வரையும், நனமனத்தால் இடையறாது தியானஞ் செய்தல் தக்கது. யோக நிஷ்டையை விரும்பியவன் தீமனத்தை நன்கு ஆய்ந்து அடக்கி நன்மனதால் எப்பொழுதுந் தியானத்தைப் பயிலவானுக. இங்ஙனம் நன்மனதால் தீமனத்தை ஆய்ந்து அடக்கி யோகநிலை கைவரப்பெற்றவனுக்குப் பத்துவித அனுபவக்குறிகள் உளவாகின்றன அப்பத்துவிதக் குறிகளை அறிந்தவனே யோகநிலைமுற்றுப்பெற்ற யோகீஸ்வரன என்பது அறிக. அப்பத்துவிதக் குறிகளாவன. பிந்து, நாதம், கலை, ஒளி, அபிந்து, துருவம, தாரகம், சாங்கம், சாந்தியதீதம், பரப்பிரமம என்பன. இவைகள் புருவநடுவிலிருந்து பிரம்ம ரந்திரம்வரை முறையாகத் தோன்றுவன என்பது அறியவும். (64)

(அ...கை) சித்தசலனத்தால் பந்தமும் சலனமின்மையால் முக்தியுமுளவெனக் கூறல் ;—

பிரம்மாவே! சித்தம் அசைந்தபொழுது பிறப்பு உளதாகிறது. சித்தம் அசையாது நிற்கின் அதுவே முக்தியெனப் படுகிறது. ஆகையால் சிறந்த அறிவின் ஆற்றலால் சித்தத்தை அசையாது நிறுத்தப் பயில்வாயாக. சித்தமே பல்வேறு தோற்றத்திற்கு மூலமாகின்றது. அச்சித்தமுள்ள பொழுதே மூவுலகமும் காணப்படுகின்றன. அச்சித்தம் நைந்து ஒழியின் உலகமும் நைந்து கெடுகின்றது. ஆகையால் நன்முயற்சியோடு சித்தத்தின் அழிவிற்குள்ள உபாயத்தை நன்கு பயில்வாயாக. (66)

(அ....கை) சித்தமும் பிராணனும் ஒன்றை யொன்று பிரியாது நிற்குமியல்பின எனக் கூறல்:—

பிரம்மாவே! எங்குச்சித்தமிருப்பதாமோ, அங்குப் பிராணனும் நிச்சயமாய் இருக்குமென்றறிக. பிராணனது உதவியின்றிச் சித்தம் எதையும் செய்யுமாற்றலற்றதாம் ஆகையால் பிராணனது உதவியைப் பெற்றுச் சித்தமானது இவ்வுடலில் விழைவோடு சிரித்தல் மேலெழுதல், விளையாடுதல், சந்தோஷித்தல், முதலியவற்றைச் செய்கின்றது. புத்தியின் உதவியால் பிராணன் உயிருடன் வாழ்தலைச் செய்கின்றது. எல்லாப் பிராணிகளிடமிருந்தும் அச்சத்தை அடைகின்றது மற்றும், அழுதல், அறிதல், சோர்வடைதல், புதிதான செல்வப் பெருக்கால் மகிழ்தல், பகைவர்களின் செயல்களில் நடுங்குதல், விரும்பிய பொருளினடைவால் இன்புறுதல், சிரித்தல், நினைத்தல், காமத்தில் ரமித்தல், முதலியவற்றைச் செய்கின்றது இங்ஙனம் சித்தமானது பிராணனது உதவியால் உடலில் நிலைபெற்றுளது என்பது அறிக. மற்றும் மனது சந்திரனாகவும், பிராணன் சூரியனாகவும் திருட்டி அக்கினியாகவும், சொல்லப்பட்டுளது, மற்றும் மனமே பிந்து என்றும், பிராணனே நாதமென்றும், திருட்டியே கலை என்பதும் அறிக. இவைகளின் தேவதைகள் முறையே பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் என்பது அறிவாயாக. (70)

(அ...கை) நாதப் பயிற்சியே மனதை ஒடுக்கும் உபாயமெனக் கூறல் :—

பிரம்மாவே! எங்ஙனம் பாலினின்றும் வெண்ணெய் வெளிப்படுகின்றதோ, அங்ஙனமே மனதினின்றும் பிந்து வெளிப்படுகின்றது. ஆகையால் மனமே பிந்து என்பது அறியவும் அம்மனமே யாவுந் தோன்றி, நிலைத்து, ஒடுங்குங் காரணமாகின்றது நாதம யாதோ, அதுவே பிந்து எனவும், அப்பிந்துவே சித்தமெனவும் சொல்லப்படுகின்றன ஆகையால் நாதம் பிந்து சித்தமாகிய மூன்றையும் ஒன்றாகவே கருதி நாதானு சந்தானத்தைப் பயில்வாயாக. இடையறாது

நாதத்தைப் பயில்வதால் வாசனை ஒழிகின்றது. அவ்வாசனையின் ஒழிவால் பிராணனும் மனதும் குறியற்றதாய் நிறைவாயுள்ள பரம் பொருளில் ஒடுங்குகின்றன. (73)

**(அ...கை) பிராணனோடு மனதைப்பொருத்தி யோகம் பயில வேண்டுமெனக் கூறல்.**

ஆறு சக்கரங்களையும் நன்கு அறிந்து பிராணனைச் சுழுமுனை வழியில் இழுத்துச் செல்லவேண்டும் பிறகு சுழுமுனை வழியாகவே மேல்நோக்கிச் செலுத்தப் பயில்வாயாக. அச்சுழுமுனை வழியிலுள்ள சக்கரத்தை நன்கு அறிந்து சித்தத்தைப் பிந்துவோடும், பிராணனோடும் நன்கு ஐக்கியஞ்செய்து அப்பியசிக்க வேண்டும் இவ்விதப் பயிற்சியால் பிராணனோடு மனஞ்சுழுமுனை வழியாக அமுதமண்டலத்தை அடைகின்றது என்பது அறிக. யோகிகள் சமாதிப் பயிற்சியின் சமகாலத்தில் மரணமிலாப் பேரின்ப வீடாகிய அமுத மண்டலத்தை அடைகின்றார்கள். (75)

**(அ=கை) குரு உபதேசத்தின்படி பயின்றாலன்றி ஞானம் பெறல் அரிது எனக்கூறல்**

எங்ஙனம் நெருப்பு கட்டையினுள் இருப்பதாயினும் கடைதலின்றி வெளிப்படுவதில்லையோ, அங்ஙனமே யோகப் பயிற்சியின்றி ஞானமாகிய தீபம் வெளிப்படாதென்பது அறிக. எங்ஙனம் குடத்தினுள் இருக்கும் விளக்கு வெளியில் ஒளிருவதில்லையோ, அங்ஙனமே உடலினுள் இருக்கும் ஞானவிளக்கும் வெளியிற் பிரகாசிப்பதில்லை. ஒருவனாற் குடம் உடைக்கப்பட்டபொழுது அதனுள்ளிருந்த விளக்கினொளி வெளிப்படுவதுபோல், குருவின் உபதேசத்தால் அஞ்ஞானமாகிய திரை நீங்கப்பெற்றதும், பிரம்மக் ஞானம் ஒளிருகின்றது. எங்ஙனம் படகோட்டியை நம்பி படகிலேறி அக்கரை செல்லுகின்றானோ, அங்ஙனமே பிறவியாகிய கடலைக் கடத்தற்குக் குருவாகிய கப்பலோட்டியை நன்கு ஆதரித்து அவருடைய உபதேசத்தின்படி பயின்று உள்ளத்திற்றோன்றுவனவாய நல்லனுபவ ஆற்றலால் பிறவிக்கடலை மக்கள் கடப்பார்கள் என்பது அறிவாயாக. (79)

"ஓம் சாந்தி! சாந்தி: சாந்தி:"

ஆறுவது அத்தியாயம் முடிந்தது.

— யோக சிகோபநிடதம் முற்றுப் பெற்றது —

118-ம் பக்கம் தொடர்ச்சி.

திருவுடை மன்னனுவன். இவன் காலம் கி. மு. இரண்டாம் நூற்றுண்டு என்று தெரிகின்றது. இவன் சிறந்த சிவபக்தன் இவனுக்கு 'வீதி விடங்கன், எனப் பெயர் பூண்ட மைந்தன் ஒருவனே உளன். வீதி விடங்கன் கோவிலுக்குத் தேரூர்ந்து சென்றபோது ஆவின் கன்று ஒன்று தேர்க்காலில் அகப்பட்டு இறக்க அதனையறிந்த தாய்ப்பசு ஆராய்ச்சிமணியை அடித்துத் தன் குறையைத் தெரிவித்தது நிகழ்ந்த தறிந்த மனுவேந்தன் தன் மகனைக் கன்று இறந்த இடத்திலே கிடத்தித்தானே தேரூர்ந்து கொன்றுன். இறை திருவருளால் கன்றும் மகனும் பிழைத்ததாகப் பெரிய புராணம் கூறுகின்றது.

இம்மன்னவனை "அரும் பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்" என்று சிலப்பதிகாரமும் 'மகனை முறைசெய்த மன்னவன் என்று மணிமேகலையும் குறிப்பிடுகின்றன இவன் பெயர் இன்னது என்று அந்நூல்கள் குறிப்பிடவில்லை இவன் சிறந்த சிவபக்தன், என்பதனை பெரியபுராணம் ஒன்றே கூறுகின்றது.

"இறைகாக்கும் வையகமெல்லா மவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்" என்னும்

குறட்பாவில் பரிமேலழகரால் மகனை முறைசெய்தான்கட் காணலாம் என்று குறித்தமைகாண்க. வேந்தனது அமைதியை யுடைய நாடே நாடென்று பாராட்டப் பெறவேண்டும். ஆனல் அரசன் காட்சிக் கெளியன், கடுஞ்சொல்லன் அல்லனுய் இருத்தல்வேண்டும்.

"காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்"

மக்கட்கிறை யென்று வைக்கப்பெறுமவனும் முறைசெய்து மக்களைக் காப்பாற்றுபவனும ஆகிய மாநில மன்னனது அமைதியுடையதாய் வேந்தனுடன் மாறுபடாமல் பொருந்திவாழும் குடிகளையுடையதாய் உழவர்களையும், தகுதியுடைப் பெரியோர்களையும் வழங்க வழங்கக் குறையாத செல்லமுடையவர்களையும் உடையதாய் ஏனைய நலன்களும் நிறைந்ததாய் உள்ள நாடே நன்ஞடென்ப,

நாடென்ப நாடா வளத்தன,

முற்றும்.

